34546





43 T I

| வினாத்தாள் | புள்ளிகள் |
|---|---|
| I | |

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2019 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2019 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2019

10.12.2019 / 0830 - 0930

චිත්‍ර I
சித்திரம் I
Art I

පැය එකයි
ஒரு மணித்தியாலம்
One hour

| | |
|---|---|
| பரீட்சகர் 1 | |
| பரீட்சகர் 2 | |
| எண்கணிதப் பரிசோதகர் | |

சுட்டெண் :.................................

* எல்லா வினாக்களுக்கும் இவ்வினாத்தாளிலேயே விடை எழுதுக.

- கீழே தரப்பட்டுள்ள ஒளிப்படத்தைப் பயன்படுத்தி **1** தொடக்கம் **5** வரையான வினாக்களிலுள்ள இடைவெளிகளை நிரப்புக.



**1.** கி.மு. 3 ஆம் நூற்றாண்டில் தேவநம்பியதீஸ மன்னனால் நிர்மாணிக்கப்பட்ட இது ..................................... விகாரை எனப்படும்.

**2.** இவ்விகாரையும் அதில் காணப்படும் செதுக்கல்களும் ..................................... காலப்பகுதிக்கு உரியவையாகும்.

**3.** இங்கு காணப்படும் சதுர வடிவ கற்றகட்டுச் செதுக்கலான ..................................... செதுக்கலின் மூலம் குப்த கலைப் பண்புகள் சித்திரிக்கப்படுவதாகக் கருதப்படுகிறது.

**4.** இங்குள்ள பாறைச் செதுக்கல்களிடையே நீராடும் யானைகள், ..................................... என்பன மிக உன்னதமான படைப்புகளாகும்.

**5.** இச் செதுக்கல்களில் குப்த கலை மரபும் ..................................... கலை மரபும் காணப்படுவதாகக் கருதப்படுகிறது.

[பக் 2 ஐப் பார்க்க

● **6** தொடக்கம் **10** வரையுள்ள வினாக்களுக்குச் சுருக்கமான விடை எழுதுக.

**6.** சேனாதிலங்கார என்ற அமைச்சரின் வழிகாட்டலில், கம்பளை லங்காதிலக விகாரையை நிர்மாணித்த கட்டடக் கலைஞர் யார்?

........................................................................................................................

**7.** கே. கனகசபாபதி என்ற கலைஞரால் படைக்கப்பட்ட 'கோழிச்சண்டை' எனும் ஓவியம் எந்த கலை மரபை வெளிப்படுத்துகிறது?

........................................................................................................................

**8.** 43 ஆம் குழுக் கலைஞர்களைச் சித்திரிக்கும் விதத்தில் நிர்மாணிக்கப்பட்டுள்ள கேலிச்சித்திரத்தை (கார்டூன்) வரைந்த கலைஞர் யார்?

........................................................................................................................

**9.** இலங்கையின் சமூகப் பின்னணியைச் சித்திரிக்கும் விதத்திலான கிறிஸ்தவ சமய நிகழ்வுகள் கண்டியில் அமைந்துள்ள எந்த தேவாலயத்தில் வரையப்பட்டுள்ளன?

........................................................................................................................

**10.** கண்டிய (மத்திய கண்டி) ஓவியப் பாரம்பரியத்துக்குரிய ஓவியங்களைக் கொண்ட மெதவல விகாரையானது எந்த விகாரைத் தொகுதிக்குரியதாகும்?

........................................................................................................................

● **11** தொடக்கம் **15** வரையான வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் மிகச் சரியான விடையைத் தெரிவுசெய்து, அதன்கீழ் கோடிடுக.

**11.** அனுராதபுர அபயகிரி விகாரை வளாகத்தில் காணத்தக்க சமாதி புத்தர் சிலையானது
(1) கி.பி. 7 ஆம் நூற்றாண்டில் செதுக்கப்பட்டதாகும்.
(2) தியான முத்திரையையும் வீராசன முறையையும் கொண்டமைந்துள்ளதாகும்.
(3) உடலோடு ஒட்டிய அலைவடிவ ஆடைச் சுருக்கத்தைக் கொண்டுள்ளதாகும்.
(4) அமராவதி பாரம்பரிய கலைப் பாணிக்கமைய செதுக்கப்பட்டுள்ளதாகும்.

**12.** பொலன்னறுவையில் காணப்படும் 2 ஆம் சிவன் கோயிலானது
(1) தென்னிந்திய பாண்டிய கட்டடக்கலை நுட்பங்களுக்கமைய நிர்மாணிக்கப்பட்டதாகும்.
(2) கி.பி. 13 ஆம் நூற்றாண்டிற்குரிய மிகப் பழமையான கோயிலாகும்.
(3) ராஜராஜசோழனின் மனைவியின் ஞாபகார்த்தமாகக் கட்டப்பட்டதாகும்.
(4) ராஜேந்திரசோழனால் தனது வெற்றியின் ஞாபகார்த்தமாகக் கட்டப்பட்டதாகும்.

**13.** 'பாறைகளில் கன்னி' எனும் லியானாடோ டாவின்சியின் ஓவியம் காணக்கிடைப்பது
(1) புனித மேரி டெலா கிரேசி தேவாலய வளாகத்தில் ஆகும்.
(2) புனித சிஸ்டைன் தேவாலயத்தில் ஆகும்.
(3) லண்டன் தேசிய நூதனசாலையில் ஆகும்.
(4) பிரான்சிலுள்ள லூவர் நூதனசாலையில் ஆகும்.

**14.** லவகூன் என்ற சிற்பத்தினால் சித்திரிக்கப்படுவது
(1) ஹெலனிஸ்டிக் காலப்பகுதிக்குரிய கலைப் பண்புகளாகும்.
(2) கிரேக்க கலைப் படைப்புகளின் அடிப்படைப் பண்புகளாகும்.
(3) மேன்மைக் காலத்திற்குரிய கலைப் பண்புகளாகும்.
(4) கிரேக்க யதார்த்த பாரம்பரியத்திற்குரிய பண்புகளாகும்.

**15.** பொலன்னறுவையிலுள்ள கல்விகாரை அல்லது உத்தராராமய எனப்படுவது
(1) பல்லவ செல்வாக்குடன் நிர்மாணிக்கப்பட்ட சிலைமனையாகும்.
(2) ஒத்த பண்புகளையுடைய நான்கு சிலைகளைக் கொண்டதொரு இடமாகும்.
(3) பராக்கிரமபாகு மன்னனின் காலப்பகுதியில் கற்பாறையில் நிர்மாணிக்கப்பட்ட விகாரைத் தொகுதியாகும்.
(4) மகாயான பௌத்த எண்ணக்கருவின் அடிப்படையில் கட்டப்பட்ட சிலைமனை (பட்டிமாகர) ஆகும்.

● **16** தொடக்கம் **20** வரையில் தரப்பட்டுள்ள ஒவ்வொரு சொல்லினதும் கருத்தை விளக்கும் வகையில் முழுமையான ஒரு வாக்கியம் வீதம் எழுதுக.

**16.** மினாரத் :........................................................................................

**17.** திரிங்குதலய :........................................................................................

**18.** பன் பாய் :........................................................................................

**19.** கோபுரம் :........................................................................................

**20.** கோன் அரக்கு :........................................................................................

[பக் 3 ஐப் பார்க்க

● **21** தொடக்கம் **25** வரையில் தரப்பட்டுள்ள ஒளிப்படப் பகுதிகளுடனான நெருங்கிய தொடர்பைக் காட்டும் உருவை, எதிரிலுள்ள **A, B, C, D, E** ஆகிய உருக்களிலிருந்து தெரிவுசெய்து, அதனைக் குறித்து நிற்கும் ஆங்கில எழுத்தினைப் **புள்ளிக்கோட்டின்மீது** எழுதுக.

**21.**  (.........)  A

**22.**  (.........)  B

**23.**  (.........)  C

**24.**  (.........)  D

**25.**  (.........)  E

● **26** தொடக்கம் **30** வரையான ஒவ்வொரு வாக்கியத்திலுமுள்ள இடைவெளிக்குப் பொருத்தமான சொல் / சொற்களை இட்டுப் பூரணப்படுத்துக.

**26.** சிவபெருமானின் முன்மாதிரியாகக் கருதப்படும் 'கொம்புக் கடவுளைச்' சித்திரிக்கும் முத்திரையானது ............................................. எனப்படும்.

**27.** தாமரைத் தண்டின் வடிவத்தை அழகியல் நுட்பத்துடன் பயன்படுத்தியுள்ள பொலன்னறுவைக் காலக் கலைஞர்களின் தனித்துவமான படைப்பானது ............................................. இல் காணப்படுகின்றது.

**28.** கண்டிய காலத்திற்குரிய தம்புள்ளை விகாரையின் ஓவியங்களை வரைந்த பெருமை .............................. ஓவியப் பரம்பரையினருக்கு உரித்தாகும்.

**29.** ஐரோப்பாவின் வரலாற்றுக்கு முற்பட்ட கால ஓவியங்களிடையே 17 அடி நீளமான எருதின் உருவம் ............................................. குகையில் காணப்படுகிறது.

**30.** பொலன்னறுவை திவங்க சிலைமனையின் கருவறையில் காணத்தக்க ஓவியங்களிடையே தேவாராதனை, ............................................. என்பன மிகப் புராதன ஓவியங்களாகக் கருதப்படுகின்றன.

● **31** தொடக்கம் **35** வரையுள்ள வினாக்களுக்கு **F, G, H, I, J** ஆகிய ஒளிப்படங்களை அடிப்படையாகக் கொண்டு விடை எழுதுக.


F


G


H


I


J

**31.** **F** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள இந்துசமயக் கடவுளின் உலோகச் சிலையானது எந்த நுட்பத்தைக் கையாண்டு உருவாக்கப்பட்டதாகும்?

..............................................................................................................

**32.** **G** எழுத்தினால் குறிப்பிடப்பட்டுள்ள இயற்கைப் பண்புகளைச் சித்திரிக்கும் காந்தாரச் சிலையானது எந்த மன்னனுடைய காலப்பகுதியில் நிர்மாணிக்கப்பட்டதாகும்?

..............................................................................................................

**33.** **H** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள நீர்வர்ணச் சித்திரத்தை வரைந்த கலைஞர் யார்?

..............................................................................................................

**34.** **I** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள, தனது எஜமான் சொல்வதைக் கேட்டு எழுதத் தயாராக இருக்கும் மனிதனைச் சித்திரிக்கும் எகிப்திய சிற்பமானது எந்த ஊடகத்தால் வடிவமைக்கப்பட்டுள்ளது?

..............................................................................................................

**35.** **J** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள அஜந்தாவின் 'அப்சரா' ஓவியமானது எவ்வகை வரைதல் நுட்பத்தைக் கையாண்டு நிர்மாணிக்கப்பட்டுள்ளது?

..............................................................................................................

● உங்களுக்கு வழங்கப்பட்டுள்ள வர்ண ஓவியத்தை இனங்கண்டு, அதன் கலைப் பண்புகளைப் பகுப்பாய்வு செய்யும் விதத்தில் **36** தொடக்கம் **40** வரையில் தரப்பட்டுள்ள உப தலைப்புகளுக்கமைவாக பொருளுள்ள **ஐந்து** வாக்கியங்கள் எழுதுக. (தனிச் சொல்லினால் விடையளித்தால் புள்ளிகள் வழங்கப்படமாட்டாது).

**36.** கலைஞர் தொடர்பாக : ..............................................................................................................

..............................................................................................................

**37.** கருப்பொருள் சித்திரிப்பு : ..............................................................................................................

..............................................................................................................

**38.** ஒழுங்கமைப்பு தொடர்பாக : ..............................................................................................................

..............................................................................................................

**39.** செல்வாக்கு தொடர்பாக : ..............................................................................................................

..............................................................................................................

**40.** உணர்வு வெளிப்பாடு : ..............................................................................................................

..............................................................................................................

* * *

34546

OL/2019/43-I





**43 | I**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2019 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2019 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2019

චිත්‍ර I / சித்திரம் I / Art I



* * *

34546

OL/2019/43-T-II





43 T II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2019 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2019 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2019

10.12.2019 / 1315 - 1515

චිත්‍ර II
சித்திரம் II
Art II

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**முக்கியம் :**

※ உங்கள் **சுட்டெண்ணை** விடைத்தாளில் உரிய இடத்தில் தெளிவாக எழுதுக.

※ விடைத்தாளைப் பரீட்சை மேற்பார்வையாளரிடம் ஒப்படைக்கும்போது உங்கள் வரைதல் உலர்ந்திருத்தல் வேண்டும். ஈரமான வரைதல்கள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொள்ளுதல் உங்களுக்குப் பாதகமாக அமையலாம்.

※ நீர்வர்ணம், போஸ்ரர் வர்ணம், கெட்டிச்சாயம் (டெம்பரா), பஸ்ரல் வர்ணம் உட்பட கையில் ஒட்டிக் கொள்ளாத எந்தவொரு வர்ண ஊடகத்தையும் பயன்படுத்த முடியும்.

※ பொருட்களின் தொகுதியை 73 cm உயரமுள்ள மட்டமான மேசையிலோ அல்லது பலகையிலோ வைக்கும்படி பரீட்சை மேற்பார்வையாளர்களுக்கு அறிவுறுத்தல் வழங்கப்பட்டுள்ளது. இதற்கமைய பொருட்தொகுதியின் கீழ்பகுதி கண் மட்டத்திற்கு கீழே அமைந்திருக்கும். அவ்வாறில்லாத சந்தர்ப்பங்கள் ஏற்பட்டால் வரையத் தொடங்க முன்னர் பரீட்சை மேற்பார்வையாளருக்கு இதனை ஞாபகப்படுத்துவதற்கு உங்களுக்கு அனுமதி உண்டு.

**சுயாதீன ரேகைச் சித்திரமும் வர்ணச் சித்திர ஒழுங்கமைப்பும்**

※ உங்களுக்கு முன்னாலுள்ள பொருட்கூட்டத்தை நன்றாக அவதானிக்க.

1. பூர்வாங்க பரும்படிப் படத்தை முதலில் வரைக. இதற்காக உங்களுக்கு வழங்கப்பட்டுள்ள வெள்ளைநிற A4 பருமட்டத் தாளைப் பயன்படுத்துக.
2. பொருட்தொகுதி உங்களுக்குக் காட்சியளிக்கும் விதத்தில் வரைந்து வர்ணந்தீட்டுக. இதற்காக வழங்கப்பட்டுள்ள விசேட வரைதல் தாளைப் பயன்படுத்துக.

※ **இரண்டு வரைதல்களையும் ஒன்றாக இணைத்து பரீட்சை மேற்பார்வையாளரிடம் ஒப்படைக்குக.**

※ உங்களது வரைதலை மதிப்பிடும்போது பின்வரும் விடயங்கள் கருத்திற் கொள்ளப்படும் என்பதைக் கவனத்திற் கொள்க.

- **சுயாதீன ரேகைக் கற்றல்**

1. பருமட்டான தாளிலுள்ள பூர்வாங்கப் பரும்படிப் படத்தில், உரிய ஊடகத்தைக் கையாளும் திறன்கள்

- **வர்ணச் சித்திரம்**

2. தளத்துக்கு உகந்ததாகப் பொருட்தொகுதி கலைநுட்பத்துடன் ஒழுங்கமைக்கப்பட்டிருத்தல்
3. அளவிடைகள், தூரநோக்கு, முப்பரிமாண விளைவு பற்றிய விளக்கம்
4. தரப்பட்டுள்ள பொருட்களின் வெளித்தோற்றப் பண்புகளை எடுத்துக்காட்டல்
5. வர்ண ஊடகங்களைக் கையாளும் திறன்
6. பொருத்தமான வர்ணப் பின்னணியும் ஒட்டுமொத்த நேர்த்தியும்

**மிக முக்கியம் :**

பொருட்தொகுதி வைக்கப்பட்டுள்ள பலகையைப் பெரிய அளவில் வரையத் தேவையில்லை. பலகையின் அளவைப் பொருட்தொகுதிக்குப் பொருந்தும் வகையில் ஏற்றதாக மாற்றி வரைவதற்கு உங்களுக்கு அனுமதி உண்டு.

* * *

OL/2019/43-T-III



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

| 43 | T | III |
|---|---|---|

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2019 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2019 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2019

**10.12.2019 / 0945 - 1145**

| | |
|---|---|
| චිත්‍ර | III |
| சித்திரம் | III |
| Art | III |

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
*Two hours*

**கவனிக்க :**

- ✼ நீங்கள் ஒரு சித்திரத்தை மாத்திரம் வரைய வேண்டும்.
- ✼ உங்கள் **சுட்டெண்ணையும்** உரிய **வினா இலக்கத்தையும்** விடைத்தாளில் அதற்கென ஒதுக்கப்பட்டுள்ள இடத்தில் தெளிவாக எழுதுக.
- ✼ விடைத்தாளைப் பரீட்சை மேற்பார்வையாளரிடம் ஒப்படைக்கும்போது, உங்களது சித்திரம் நன்றாக உலர்ந்திருக்க வேண்டும். ஈரமான சித்திரங்கள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொள்ளுதல் உங்களுக்குப் பாதகமாக அமையலாம்.
- ✼ வர்ணந் தீட்டுவதற்கு நீர்வர்ணம், போஸ்ரர் வர்ணம், பெஸ்ரல் வர்ணம் உட்பட கையில் ஒட்டிக் கொள்ளாத எவ்வகை வர்ண ஊடகத்தையும் பயன்படுத்தலாம்.
- ✼ வரைவதற்கு வெள்ளைத் தாளும் தேவையானவர்களுக்குத் திசுத் தாளும் வழங்கப்படும்.

**அ, ஆ, இ** ஆகிய பகுதிகளுள் ஏதேனும் **ஒன்றை மாத்திரம் தெரிவுசெய்க.**

### பகுதி அ - சித்திர ஒழுங்கமைப்பு

**1.** மழை பெய்துகொண்டிருக்கும்போது பாடசாலைக்குச் செல்லும் மாணவர் கூட்டம்

**2.** கிராமியச் சந்தை / நடைபாதை பழச் சந்தை

**3.** சிறு பிள்ளைகளுக்கான வினோத உடைப் போட்டி நிகழ்வு

**4.** இல்ல விளையாட்டு விழாவில் இல்லமொன்றிற்கு முன்னால் மகிழ்ச்சி ஆரவாரம் செய்யும் மாணவர்கள்

### பகுதி ஆ - அலங்கார ஆக்கம்

**5.** மரபுரீதியான தாவர அலங்காரங்களைப் பயன்படுத்தி 4 அடி விட்டத்தைக் கொண்ட வட்ட வடிவ மேசையொன்றுக்குப் பொருத்தமான சதுரவடிவ மேசை விரிப்புக்குரிய அலங்காரமொன்றை நிர்மாணிக்குக. மேசைக்கு வெளியே தொங்கியவாறு இருக்கும் பகுதி தொடர்பிலும் கவனத்திற்கொள்ள வேண்டும். (தாளுக்குப் பொருத்தமான விதத்தில் அளவிடைக்கமைய திட்டமிட்டுக்கொள்க.)

**6.** பிராணிகளின் வடிவங்களைப் பயன்படுத்தி, சாரம் அல்லது சேலை முந்தானைக்குப் பொருத்தமானவாறு 8 அங்குல அகலமான கரை அலங்காரமொன்றை நிர்மாணிக்குக.

**7.** புடவை அச்சிடலுக்குப் பயன்படுத்தத்தக்க விதத்தில் பரவல் அலங்காரமொன்றின் $9 \times 9$ அங்குலப் பகுதியொன்றை அலங்காரங்களைக் கொண்ட கேத்திரகணித வடிவங்களைப் பயன்படுத்தி நிர்மாணிக்குக. (அலங்காரப் பகுதியின் அளவு, பரவலடையும் விதம் என்பன தொடர்பில் கவனம் செலுத்துக.)

### பகுதி இ - கிறபிக் சித்திரம்

**8.** மரநடுகையின் முக்கியத்துவத்தை வெளிப்படுத்தும் 'பசுமையான நாடு' எனும் தலைப்பிலான வர்ணச் சுவரொட்டியொன்றை நிர்மாணிக்குக.

**9.** உங்கள் பாடசாலையின் கலைக் கழகத்தினால் ஏற்பாடு செய்யப்படவுள்ள சிறுவர் சித்திரக் கண்காட்சி ஒன்றிற்கான அழைப்பிதழ் ஒன்றை வடிவமைக்குக.

**10.** 'எமது பாரம்பரியம்' என்ற தலைப்பில் விமர்சனரீதியாக எழுதப்பட்ட நூல் ஒன்றிற்கான மேலட்டையை வடிவமைக்குக.

✼ ✼ ✼

